# நகரத்தார் இதழ்

பள்ளத்தூர் சிறப்பிதழ்

(சமூக இலக்கிய மாத ஏடு)



மார்ச்சு—1990

(சுக்ல — பங்குனி)

ஆசிரியர்—சுப. செந்தமிழன்

ஓம்

தாய் தீப்பாய்ந்தாளுக்கு வணக்கம்

தமிழ் அன்னைக்கு வணக்கம்

# நகரத்தார் இதழ்

## பள்ளத்தூர் சிறப்பிதழ்

மலர்: 3  இதழ்: 10

ஆசிரியர்

சுப. செந்தமிழன்

5, யானைக்காரச் சந்து,

மீனாட்சி அம்மன் கோவில் தெரு,

மதுரை-1.

மார்ச்சு - 1990

(சுக்ல - பங்குனி)

நன்கொடை ரூ. 2/-

தமிழ்நாடே வாழ்க - எம்
தாய்நாடே வாழ்க
அமிழ்தாகிய இயலிசை கூத்தென்னும்
தமிழாகிய உயிர்தனையும் விழுமிய தமிழ்நாடே வாழ்க

— புரட்சிக்கவிஞர்
பாரதிதாசனார்

# பள்ளத்தூர் - அடைக்கல விநாயகர்

"உடைப்பெருஞ் செல்வமாய் ஊற்றதன் நீராய்
மடைப்பெரும் வெள்ளமாய் மாணவர்க்கு - கல்வி
அடைக்கல (வி)நாயகரே ஆல்போல் தழைக்க
அடைக்கல முன்றன் அடி

- புலவர் மாமணி முத்துராமன்



கல்வி வளமும் கழனி வயல் வளமும்
செல்வ வளமும் சிறந்திருக்கும் – பள்ளத்தூர்

– அர. சி. பழநியப்பன்



தொன்று தொட்டு வாணிபத்தில் தூய எண்ணம்
தொடங்குகின்ற செயலெல்லாம் துலங்கும் வண்ணம்
நன்று செய்ய ஈட்டுகின்ற பொருளில் எல்லாம்
நலந்தோன்ற இரண்டு சதம் எடுத்து வைத்தார்
இன்று அது மிக வளர்ந்து இமயம் போல்
ஏற்றமுள்ள பெருஞ்சொத்து ஆனதன்மை
நன்றறிந்த வெளிநாட்டு நடப்பால் கண்டோம்!
நாமின்று அதுபோல் செய்ய வேண்டும்

நன்றி: கருநாடக நகரத்தார் மலர்

# கவியரசு கண்ணதாசன் அவர்களின் வாழ்த்து

அங்கையர்க் கண்ணி எங்கள் அகிலாண்ட நாச்சியார்க்கு
தங்கயற் கண்கள இன்று; தாமரை போல் சிவக்கும்
மங்கையர் குலத்தின் தெய்வம் மண நாளில் கொண்ட காதல்
பொங்குயர் அருவியாகிப் பூக்கண்கள சிவக்கும் இன்றே

அறுபதாம் ஆண்டில் மீண்டும் அடைகின்ற சாந்தி இன்று
இருபதாம் ஆண்டில் பெற்ற இன்பத்திற் கிணையே யாகும்
பெறுவதாம் சுகங்கள் எல்லாம் பெற்றவள் தமிழ் மீனாட்சி
உறுபெறும் உவகை கண்டு உவக்கின்றான் சுந்தரத்தான்

கொம்பென வளைந்த கோதை கொடியிடை அசையும் காட்சி
செப்பியன் சுந்தரன் தன் சிந்தைக்கு மற்றோர் சாட்சி
நர்புக எம்மை என்று நல்லவர் பளளத்தூரில்
தம் பெரும் கோயில் கண்டார் தழுவட்டும் மீண்டும் மீண்டும்

சிகரத்தில் நாட்டை வைத்த திருமகள் மீனாட்சிக்கும்
ல''கரத்தில் பணத்தைத் தந்த நாயகர் சுந்தரர்க்கும்
நகரத்தார் கோயில் கட்டி நற்குடமுழுக்கு கண்டு
மகரமீன் கொடியை ஏற்றும் மாண்புகழ் வாழ்க! வாழ்க!

நாட்டுக்கோர் கோட்டையான நகரத்தின் மக்கள் கூடி
பாட்டுக்கோர் மலரும் போட்டுப் பண்புக்கோர் மகுடம் சூட்டி
வீட்டுக்கோர் பெருமை சேர்க்கும் விழாவினை மனத்திற் கண்டு
தாட்டினோம் பாடல் ஒன்று நம்மை மீனாட்சி காக்க

- கவியரசு கண்ணதாசன்

நாள்: 11-7-73 நன்றி: பள்ளத்தூர் நகரத்தார் அலுவலர் சங்கம்

## அருள்மிகு கைலாச விநாயகர்

அன்பே, அமுதே, அருமருந்தே
அருளே, பொருளே, அழியாத
இன்பே, இனிய கனிரசமே
என்றே இறைஞ்சி இணையடிகீழ்

என்பே உருக மெய்சிலிர்க்க
எளியேன் எனக்குன் அருள் தருவாய்
துன்பே அணுகாப் பள்ளத்தூர்த்
துணைக் கைலாச விநாயகனே

— அ. மு. ப. அ. முருகப்ப செட்டியார்
பள்ளத்தூர்

## அருள்மிகு சௌந்தரராசப் பெருமாள்

சீர்மேவும் பள்ளத்தூர் சேமமித மேற்றிசையில்
தார்மேவ வீற்றிருக்கும் சௌந்தரராஜப் பெருமாள்
பார்மீது போற்றி பரவுவார் பன்னலமும்
பேர்திகழப் பெற்றுப் பேருலகில் வாழ்வரே

பார்புகழும் வண்ணம் பள்ளத்தூர் நன்மக்கள்
கார்வளம் கண்டு கலைகள் நனிபயின்று
பேர்விளங்கும் அழகரசின் பெருமை நலம்பாடிச்
சீர்மலிந்து செம்மைத் திருவளர்ந்து உய்வாரே

— கே. ஆர். சீனிவாசன்

நன்றி: பள்ளத்தூர் குடமுழுக்கு விழா மலர்

# பள்ளத்தூர்

மாவட்டம் – பசும்பொன்தேவர் திருமகன் மாவட்டம்

வட்டம் – காரைக்குடி வட்டம்

இருப்பிடம் – காரைக்குடிக்கு வடக்கே 10 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது.

ஊராட்சி மன்றத் தலைவர் - M.V. முருகப்ப செட்டியார் அவர்கள்

**ஊர் பெயர்க் காரணம்:** இந்த ஊர் பள்ளமான பகுதியில் அமைந்துள்ளதால் பள்ளத்தூர் எனப் பெயர் வந்தது. இவ்வூரை இரணிக கோவிலைச் சார்ந்த உ. அ. வகையினர் உருவாக்கினர். முதலில் இவ்வூர் புதூர் என்று அழைக்கப்பட்டது. பின்னர் நிலத்தின் தன்மையால் பள்ளத்தூர் எனப் பெயர் பெற்றது. மித்திராவயல், ஆத்தங்குடி, கத்தப்பட்டு கருங்குளம், ஆறாவயல், ஆகிய ஊர்களிலிருந்த நகரத்தார்கள் இவ்வூரில் வந்து குடியேறினார்கள்

**குறிப்புகள்:** சாலி வாகன சகாப்தம், ருத்ரோக்காரி வருடம் வைகாசி மாதம் 15ம் நாள் பவுந்தராயன், மூவேந்தராயன் விருபாச்சிராயன் ஆகியோர் தளவாய் முத்து சேர்வைக்காரனுக்கு எழுதிக் கொடுத்த பட்டயத்தில் பள்ளத்தூர் என்றே ஊரின் பெயர் உள்ளது.

நன்றி: பழ. அண்ணாமலை

**நகரத்தார் புள்ளி விபரம்:**

| | | |
|---|---|---|
| இளையாற்றங்குடி | | |
| இரணியூர்க் கோவில் | : | 246 |
| வயிரவன் கோவில் | : | 166 |
| நேமம் கோவில் | : | 117 |
| இளையாத்தக்குடி | : | 63 |
| இலுப்பைக்குடி | : | 58 |
| மாத்தூர் கோவில் | : | 53 |
| சூரக்குடி கோவில் | : | 53 |

நன்றி: நாநயா

# இறை உணர்வு மிக்க பள்ளத்தூர்

## ஆலயங்கள்:

### நகரச் சிவன் கோவில்
### அருள்மிகு மீனாட்சிசுந்தரேசுவரர் ஆலயம்

1868 அக்டோபர் 15ல் அ.மு.மு. குடும்பத்தார் திருக்குளத்திற்கு வடக்கே இருந்த அவர்கள் இடத்தை நகரச் சிவன் கோவில் கட்டக்கொடுத்தார்கள். வன்னியக் சூரக்குடியில் இருந்த சிவலிங்கம் பள்ளத்தூருக்கு கொண்டு வரப்பட்டு நிறுவப் பெற்றது. கோவிலூரில் நிறுவ இருந்த அம்பாள் திருவுருவம் பள்ளத்தூருக்கு கொண்டு வரப்பட்டு நிறுவப்பெற்றது. நகர சிவன் கோவிலின் முதல் குடமுழுக்கு நீராட்டு விழா பிரமாதீச வருடம் ஆனி மீ 27வ 10–7–1913 வியாழக்கிழமை நடைபெற்றது. புதிதாக உருவாக்கப் பட்ட இக்கோவிலில் வன்னியச் சூரக்குடி கோவிலிருந்து கொண்டு வரப்பட்ட சிவலிங்கம் சோமசுந்தரர் சந்நிதிக்கு தெற்கே பூர்வ சுந்தரேசுவரர் என்ற திருப்பெயருடன் நிறுவப் பெற்றுள்ளது. சிவலாயத்தில் வலம்புரி விநாயகர் புதிதாக நிறுவப்பெற்றுள்ளது.

சிவன்கோவிலில் குடமுழுக்கு விழாக்கள் நடைபெற்ற ஆண்டுகள்

1) 10–7–1913 3) 10–2–1939 5) 11 7 1973
2) 28–8–1931 4) 9–9–1956 6) 1 2–1990

சிவன்கோவிலில் ஆனி மீ 10 நாட்கள் திருவிழா சிறப்பாக நடைபெறும்.

### அருள்மிகு சௌந்தரராசப் பெருமாள் கோவில்

கானாடுகாத்தான் நெடுஞ்சாலையில் இக்கோவில் உள்ளது இக்கோவிலின் முதல் திருக்குட நன்னீராட்டு விழா 1969 சூலை 2ல் நடைபெற்றது. 12-3 1972 ல் திருவாழியாழ்வான் கோவில் திருப்பணி தொடங்கப் பெற்று 11 9-1972 ல் திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற்றது. 29 1 – 90 அன்றும் இக்கோவிலின் திருக்குட நன்னீராட்டு விழா சிறப்பாக நடை பெற்றது. மீனாட்சி தரும பரிபாலன சபையால் இவ் ஆலயம் சிறப்பாக நடத்தப்பட்டு வருகின்றது. ஆவணி பௌத்தர உறசவம் சிறப்பாக நடைபெறும்.

## அருள்மிகு கைலாச விநாயகர் கோவில்:

இவ்வூரின் வடக்கே இக்கோவில் உள்ளது. அ. மு. மு. குடும்பத்தாருக்குரிய இக்கோவிலில் வீற்றிருக்கும் கைலாச விநாயகர் மேல் ஒவ்வொரு மாசி மாதமும் குறிப்பிட்ட ஒரு நாளில் சூரிய ஒளி விழும். இது ஒரு குறிப்பிடத்தக்கச் செயல்:

## அருள்மிகு தர்மசாசுதா கோவில்:

இக்கோவில் ஸ்ரீ விசாலம் சிட்பண்ட் லிட் குடும்பத்தினருக் குரியது. இக்கோவிலில் சிறப்பு அபிசேக ஆராதனை மிகச் சிறப்பாக நடைபெறும்.

## மற்ற ஆலயங்கள்:

இவவூருக்கு தெற்கே சத்திரத்துப் பிள்ளையாரும் வடக்கே கைலாச விநாயகரும், கிழக்கே கந்தன் குளத்து விநாயகரும் மேற்கே கிழவன் செட்டி ஊரணி பிள்ளையாரும் அமைந்துள்ளனர் எல்லைத் தெய்வங்களாக வடக்கே வலையன் கோவில் முனியய் யாவும், தெற்கே பள்ளத்தி ஐயனாரும், கிழக்கே கந்தன் குளத்து முனியய்யாவும், மேற்கே சந்தைப்பேட்டை முனியய்யாவும் உள்ளனர். இவ்வூர் ஐயனார் ஆலயம் முன்பு பெண்கள் நின்று பார்ப்பதில்லை

## அழ.கா. பொது படைப்பு:

அழகப்ப செட்டியார் காளியம்மை ஆச்சி பொது படைப்பு வீடு நகரச் சிவன்கோவில் அருகே உள்ளது. மூவாயிரம் பேர் கூடி இப்படப்பை சிறப்பாக நடத்துவார்கள். இப்படைப்பில் புதுவயல், தேவகோட்டை, கொத்தமங்கலம், கோட்டையூர், பலவான் குடி, கடியாபட்டி ஆகிய ஏழூரார் பங்கு கொள்ளவார்கள் இப்படைப்பு ஆவணி மாதம் நடைபெறும். **நாச்சாத்தாள் படைப்பு** மாசி மாதம் சிறப்பாக நடைபெறும்.

## பொது மன்றங்கள்:

மீனாட்சி தரும பரிபாலனசபை 1959 பிப்ரவரி 12 ல் தொடங்கப்பெற்றது. மங்கையர்க்கரசி மன்றம் 1978 ல் தொடங்க பெற்றது. இம்மன்றத்தலைவியாக அ.மு.மு. அரு. லெட்சுமி ஆச்சி அவர்களும், செயலராக சித. உமையாள் ஆச்சி அவர்களும் உள்ளனர். இவ்வூரில் நகரத்தார் இளைஞர் சங்கம் உள்ளது.

| அறிவு ஆலயங்கள் | தொடக்கம் | தோற்றுவித்தவர்கள் |
|---|---|---|
| 1) சீதாலெட்சுமி ஆச்சி மகளிர் கல்லூரி | – 1962 | உ. அ. பெரி மு. அருணாசலம் செட்டியார் குடும்பம் |

செக்கடிப்பத்தான் தெப்பகுளியில் – 1932 ல் முதலாவது உயர் நிலைப்பள்ளி தொடங்கப்பெற்று இன்று அது மேல்நிலைப்பள்ளி யாக உள்ளது.

| | | |
|---|---|---|
| 2) சீதா ஆச்சி தொடக்கப்பள்ளி | – 1930 – | சொ. மு. அ. மெ மு மெ குடும்பம் |
| 3) சோலைச்சி ஆச்சி நர்சரி பள்ளி | – | M.S உடையப்ப செட்டியார் அவர்கள் |
| 4) அழகம்மை ஆச்சி பள்ளி | – | சொ மா. கரு. அண குடும்பம் |
| 5) R.M.M. பெண்கள் உயர்நிலைப்பள்ளி | – | ராம மு. குடும்பம் |

6) பழையூரில் காந்தி சமதர்ம பாட சாலை உள்ளது.

7) அடைக்கப்பாவரி பள்ளி



## ஸ்ரீ சாரதா சேவா ஆசிரமம்:

இந்த நிறுவனம் தொடங்கி பல ஆண்டுகள் ஆகின்றது. இந்த நிறுவனத்தை காலஞ்சென்ற திரு. எம். ஏ. பழநியப்ப செட்டியார் தொடங்கி வைத்தார். ஏழையான பெண்களுக்கு இங்கு நெசவுத் தொழில், சோப்புகள் செய்தல், பூக்கள் செய்தல், பின்னுதல், நூல நூற்றல், அச்சுத் தொழில் முதலியவற்றில் பயிற்சிக் கொடுத்து, உழைக்க கொடுத்து வேலைத் தந்து ஆதரித்து வருகின்றார்கள். இங்கு உற்பத்தியாகும் பொருட்கள் கதர்த்துறை மூலம் விற்பனை செய்யப்படுகின்றது.



## பள்ளத்தூருக்கு புகழ் சேர்த்துக் கொடுப்பவர்கள்



"உருவான தொழில்கள் யாவும்
உன் புகழ் தினம் சொல்லும்
அருங்கல்விச் சாலைகள் யாவும்
அண்ணலுன் புகழ் பரப்பும்
பெரும்புகழ் நகரத்தார் குலம்
பெருமை பெறச் செய்த
நல்லோரே!
திருக்கோயில் அறப்பணிகள்
உள்ளூரில் துலங்கிட
ஆற்றிய
எங்கள்
முருகப்ப வள்ளலே உம் புகழ்
முத்தமிழ் போல் நாளும் வாழி!

— அம்பத்தூர் நகரத்தார் மன்றம்

தோற்றம் : 1902 ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 23 ம் நாள்

தந்தை : திவான் பகதூர் அ.மு முருகப்ப செட்டியார் அவர்கள்

தாயார் : வெள்ளியம்மை ஆச்சி அவர்கள்

தொழில் துறையில் இவர் செய்த சாதனைகள் அளவற்றவை இவரது முயற்சியால் தோன்றிய தொழில் நிறுவனங்கள் கார்பொரண்டம் யூனிவர்சல் லிமிடெட், இன்வெஸ்ட் மெண்ட் ஆப் இந்தியா லிமிடெட், டி.ஐ மில்லர் கம்பெனி, டி. ஐ. டைமன் மற்றும் பல தொழிற் நிறுவனங்களாகும். அ.மு மு. அறப்பணிக்குழு இவரால் அமைக்கப்பட்டது. இவருக்கு அம்பத்தூரில்பொதுமக்கள் சிலை எடுத்துள்ளனர். 1965 ம் ஆண்டு நவம்பர் திங்கள் முதல் நாள் இறைவன் திருவடி சேர்ந்தார். இவரால் தமிழ்நாடு பெருமை பெற்றது.

---

## அ. மு. மு. அறப்பணிக்குழு

இக்குழுவின் சார்பில் பள்ளத்தூரில் அ.மு மு. மருத்துவமனை அவடியில் முருகப்ப செட்டியார் பாலிடெக்னிக், திருவொற்றியூரில் வெள்ளையன் செட்டியார் மேல்நிலைப்பள்ளி, அம்பத்தூரில் சர் ஆ.இராமசாமி முதலியார் மேல்நிலைப்பள்ளி அம்பத்தூரில் ஐவன் ஸ்டெட் போர்டு மருத்துவமனை ஆகியவைகள் அமைக்கப் பட்டது.

---

# பள்ளத்தூர் - திருப்பணிச் செல்வர்கள்

## தஞ்சை மாவட்டம் (சோழ நாடு)

1) அம்பர்மாகாளம் - சு.ப.குமரப்ப செட்டியார் அவர்கள்

2) திருவிற்குடி - சொ. மு. அ. மெ. குடும்பத்தார்

3) மயிலாடுதுறை
நன்னிலம் } - ஸ்ரீ விசாலம் சிட்பண்டு லிட்
R. M அருணாசலம் அவர்கள்

மயிலாடுதுறை, நன்னிலம் ஆகிய வட்டங்களில் ஆறு கோவில்களை தமது சொந்த செலவில் நிர்வகித்து வருகின்றனர்,

4) கும்பகோணம்
எல்லை பிடாரி அம்மன் கோவில்-R.M. அருணாசலம் அவர்கள்

## பாண்டியநாடு:

1) திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோவில் { வயிநாகரம் குடும்பத்தார் — தேவகோட்டை; சுப.குமரப்ப செட்டியார் — பள்ளத்தூர்; பழ.கரு.குடும்பத்தார் — கண்டவராயன் பட்டி }

## நடுநாடு

1) புறவார் பனங்காட்டூர் - கோவிலூரார் வீட்டு
முத்து வீரப்ப செட்டியார்
உ.அ.உ.அ.முத்தையா செட்டியார்
நகரத்தாரும்

திருச்சி மாவட்ட திருவரங்கத்தில் ஸ்ரீ விசாலம் சிட்பண்ட் லிட் RM. அருணாசலம் அவர்கள் வேதப்பாட சாலையை சிறப்பாக நடத்தி வருகின்றார்கள்.

---

**திருச்சி சங்கம்** திருச்சி நகரத்தார் சங்கத்தின் முயற்சியால் நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் ஆதரவில் 29-1-90 அன்று பிள்ளையார்பட்டியில் ஐந்து கூட்டுத் திருமணங்கள் சிறப்பாக நடைபெற்றது.

---

## தென்னகத்தின் தொழில் மேதை
## அ. மு. மு. அருணாசலம் செட்டியார் அவர்கள்



தென்னகத்தின் தொழில் மேதை அ. மு. மு. அருணாசலம் செட்டியார் அவர்களை 1988ல் சென்னையில் அவரது இல்லத்தில் சந்தித்து பேட்டிக் கண்ட பொழுது கனிவுடன் வரவேற்று இனிமையுடன் அவர் எனக்கு அளித்த பேட்டி என்றும் எனது மனதில் பசுமையுடன் உள்ளது அக்குடும்பத்தரால் பள்ளத்தூர் உலகப்புகழ் பெற்றதுயென்றால் அது மிகையில்லை.

தோற்றம் : மார்ச் 1, 1918

பல தொழிற் நிறுவனங்களின் நிருவாக இயக்குநராக உள்ளார்.

அ. மு. மு. அறப்பணிக்குழுவின் தலைவராக உள்ளார். டியூப் இன்வெஸ்ட் மெண்டஸ் ஆப் இந்தியா லிமிடெட், கார்பொரண்டம் யூனிவர்சல் லிமிடெட், சௌத் ஆசியன் பைனான்சியல் எக்ஸ்சேஞ்சு லிமிடெட் ஆகிய நிறுவனங்களின் தலைவராக உள்ளார். அம்பத்தூரின் தொழில் வளர்ச்சிக்கு காரணமானவர். இவரால்இவரைஈன்ற பள்ளத்தூர் பெருமைபெற்று உள்ளது நான் சென்னையில் இவரை பேட்டிக் கண்ட பொழுது இவர் அளித்த பதில்களில் குறிப்பிடத்தக்கது நாம் எல்லோரும் ஒன்றுபட்டு உற்காசத்துடன் செயல்பட்டால் இசுரேல் நாட்டு யூத இனம் போல் நாமும் முன்னேற முடியும் என்று கூறியதாகும்.

### கண்டனூர்:

1 – 2 – 90 அன்று கண்டனூர் செட்டியார் ஊரணி கற்பக வினாயகர் கோவில் குடமுழுக்கு நீராட்டு விழா சிறப்பாக நடைபெற்றது.

## எம். வி. அருணாசலம் அவர்கள்

தோற்றம் : 1927 ஜுலை 19

E.I.D. PARRY (INDIALTE) MADRAS, TAMILNADU INDUSTRIAL INVESTMENT CORFORATION LTD T.I.DIAMOND CHAINLTD, T.I.MILLER LTD ஆகிய தொழில் நிறுவனங்களின் தலைவராக உள்ளார். TUBE INVEST MENTS OF INDIA LTD MADRAS என்ற நிறுவனத்தின் நிருவாக இயக்குநராக உள்ளார். பல தொழில் நிறுவனங்களின் இயக்குநராக உள்ளார். தொழில் மேதைகள் தோன்றிய குடும்பத்தில் பிறந்த இவரும் ஒரு தொழில் மேதையாவர், நமது நாடு இக்குடும்பத்தால் தொழில்துறையில் முன்னேறி பெருமை பெறுகின்றது.

---

## புகழ்மிக்க புள்ளிகள்:

1) M.A.பழனியப்ப செட்டியார் அவர்கள் நாச்சம்மை காட்டன் மில் — செட்டிநாடு

2) AR. அண்ணாமலை செட்டியார் அவர்கள்

3) வெங்கடேசுவர மில்ஸ் உரிமையாளர் O.A. அனந்தபத்மநாபன் செட்டியார் அவர்கள் உடுமலை திண்டுக்கல், சென்னை போன்ற நகரங்களில் நூற்பாலைகளை நடத்தி வருகின்றார்கள்.

4) V.M,R.P. பெரியகருப்பன் செட்டியார் அவர்கள் குடும்பத்தார் திண்டுக்கல், சேலம் நகரங்களில் நூற்பாலைகள் வைத்து உள்ளார்கள்.

---

## சேலத்தில்

சேலம் சவகர் மில் அருள்மிகு கற்பக விநாயகர் கோவிலை பள்ளத்தூர் M. A P. L. அண்ணாமலை செட்டியார் அவர்களும் M.A P.L. விவேகானந்த செட்டியார் அவர்களும் கட்டி முடித்து சேலம் நகரத்தார்கள் ஆதரவுடன் 1 – 5 – 1988 ல் சிறப்பாக குடமுழுக்கு நீராட்டு விழா செய்தார்கள்.

---

## பெருமைக்குரிய

## SRM PL சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள்

தோற்றம் : 1922 கோவில்: வயிரவன் கோவில் தையனார் வகுப்பு

தந்தையார்: பழனியப்ப செட்டியார் அவர்கள்

தாயார் - நாச்சம்மை ஆச்சி அவர்கள்

மதுரையிலுள்ள அமெரிக்கன் கல்லூரியில் B A. முடித்து, சென்னை பச்சையப்பன் கல்லூரியில் B.Sc, முடித்து 1947 ல் தோல் ஏற்றுமதி தொழிலை ஆரம்பித்தார். 1964 ல் SRP. Tools நிறுவனத்தை தொடங்கினார் SRP. Tools நிறுவனம் சென்னையில் ஒன்றும், ராணிபேட்டையில் ஒன்றும் உள்ளது. இந்தியாவில் புகழ்பெற்ற நிறுவனமான வோல்ட்டாஸ்'' SRP Tools ன் விற்பனை ஏஜெண்டாக உள்ளது. SRP. Tools அமெரிக்கா – பிரிட்டன் போன்ற வல்லரசுகளுக்கு ஏற்றுமதியாகின்றது. இவருக்கு இரண்டு மகன்களும், இரண்டு மகள்களும் உள்ளனர் முதல் மகன் இராம நாதன் அவர்கள் B.E. மெக்கானிக்கல் படித்துவிட்டு SRP. Tools நிறுவனத்நின் நிருவாக இயக்குனராக உள்ளார். மற்றொரு மகன் பழனியப்பன் B.Com அவர்கள் சென்னை SHOE FAENIK நிறுவனத்திற்கு நிருவாக இயக்குனராக உள்ளார்' இவரது மாப்பிள்ளைகள் சா. நா. அ. சொ. விசுவநாதன் அவர்கள் A K.CT.V.CT. அருணாசலம் அவர்கள். இவர் சென்னை நகரத்தார் ஐக்கியச் சங்க கட்டிடத்திற்காக ஒரு லட்சம் வழங்கியுள்ளார். கோட்டையூர் 'மருத்துவக் கல்லூரி விஸ்வேஸ்ரா டிரஸ்டிற்கு 15 லட்சம் வழங்கியுள்ளார். இவர் வழங்கியுள்ள நன்கொடைகள் அளவற்றவை. இவர் 20 முறை உலகப் பயணம் மேற்கொண்டு உள்ளார். சென்னை நகரத்தார் ஐக்கியச் சங்கத்தின் துணைத் தலைவராக உள்ளார்.

---

## ஆவினிப்பட்டி

ஆவினிப்பட்டி காட்டுச் சுப்பையா கோவில் குடநீராட்டு விழா 1 2–90 அன்று சிறப்பாக நடைபெற்றது.

---

# சின்னச் சின்னச் செய்திகள்

தொகுத்தவர்: சுப. செந்தமிழன்

1) பள்ளத்தூரைச் சார்ந்த இரங்கூன் தமிழன்பர் காந்தி அண்ணாமலை அவர்கள், நேதாசி, பர்மிய வீரர் போஜா அவுங்சன், கவியரசர் தாகூர் போன்ற பெரியவர்கள் பற்றிய நூல்களை எழுதியுள்ளார்.

2) காந்தி அண்ணாமலைக்கு காந்தியடிகள் "நீரில் எழுத்தாகும் யாக்கை" என்ற பொன்மொழியை தமிழில் எழுதி கையொப்ப மிட்டுக் கொடுத்துள்ளார்.

3) பள்ளத்தூர் மு. அ. குடும்பத்தார் நாமக்கல் கவிஞரின் வளர்ச்சிக்கு பெரிதும் துணையாக இருந்தனர்.

4) பள்ளத்தூர் வயிரம் அருணாசலம் செட்டியார் அவர்கள் நாடகப் புரவலர் எனப்பட்டம் பெற்றவர். இவர் ஸ்ரீராம பால கான விநோத சபை ஏற்படுத்தி பல சமூக, வரலாற்று நாடகங்களை பல ஊர்களில் நடத்தினார்.

5) பள்ளத்தூர் அ மு.மு. வெள்ளையன் செட்டியார் அவர்கள் பர்மாச் சட்டமன்ற உறுப்பினராக இருந்த ஒரே நகரத்தார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

6) ஸ்ரீ விசாலம் சிட்பண்ட் லிமிடெட் நிருவாக இயக்குநர் RM. அருணாசலம் அவர்களின் மனைவி மீனாட்சி அருணாசலம் 1986 ம் ஆண்டு காரைக்குடியில் இன்னர்வீல் குழுவை நிறுவி, அதன் முதல் தலைவியாகி நல்ல பல பணி களைச் செய்து வருகின்றார்.

7) இங்கே ஏராளமான நெல் அவித்து அரைக்கும் தொழிலகங் களும், பித்தளைப் பாத்திரத் தொழிற்சாலைகளும் உள்ளன

8) மதுரையில் புகழ்பெற்ற விஜயா 'பிரிண்டர்ஸ் நிறுவனம் பள்ளத்தூரைச் சார்ந்த K ராமன் செட்டியார் அவர்களால் 1917 ல் நிறுவப் பெற்று அவரது செல்வர் R.சொக்கலிங்கம் அவர்களால் நிருவாகிக்கப்படுகின்றது.

9) பள்ளத்தூர் சிவலாயத்தில் புதிதாக சந்தான சிவாச்சார்யார்கள் நால்வரும் நிறுவப் பெற்றுள்ளனர்.

10) இவ்வூரில் பிறந்த காசி செட்டியார் அவர்கள் கோவிலூர் காசி விசுவநாத ஞானதேசிக சுவாமிகளாக உள்ளார்

11) திரைப்பட நடிகை மனோராமாவின் சொந்தஊர் பள்ளத்தூர்



**மதுரை விஜயா பிரிண்டர்ஸ் திருவளர் K. ராமனீ செட்டியார் அவர்கள்**

தோற்றம் : 1921, மே 11 ஆம் நாள்

ஊர்: பள்ளத்தூர்

தந்தை : காசி விசுவநாதன் செட்டியார் அவர்கள்

தாயார்- விசாலாட்சி ஆச்சி அவர்கள்

மறைவு : 25-12-88

'பள்ளத்தூரில் தொடக்க கல்வியையும், மதுரை பசுமலையில் உயர் நிலைப்படிப்பையும் அமெரிக்கன் கல்லூரியில் பட்டப் படிப்பையும் பயின்றார். தமது 24 ஆம் வயதில் விசாலாட்சியை திருமணம் செய்து கொண்டார். "சிறுமையும், பெருமையும் செய்யும் முறையினால் அமைவதே அன்றி செய்யும். தொழில் தொழிலில் இல்லை என்ற கொள்கையுடையவர்" அதனால் பல்வேறு தொழில்கள் செய்து வாழ்வில் முன்னேற்றமடைந்தார். 1947 ல் விசயா பிரிண்டர்சை நிறுவினார். அவரது உழைப்பால் அச்சகம் வளர்ந்தது. இந்திய சோவியத் நட்புறவுக் கழகங்களில் பங்கு கொண்டு அதன் வளர்ச்சிக்கு பெரிதும் உதவினார். சர்வோதய இயக்கம், காந்திய சிந்தனை ஆகியவற்றில் ஆர்வம் மிக்கவராய் விளங்கினார். திருநகர் பேரூராட்சியின் தலைவராக 10 ஆண்டுகளுக்கு மேல் பணியாற்றினார். திருநகரில் அண்ணல் பூங்கா ஊராட்சி மன்றமும், நூலகமும் விரிவான புதிய கட்டிடத்தில் இவரது காலத்தில் அமைக்கப்பட்டன. நகருக்குள் பேருந்து விட ஏற்பாடு செய்தார். திருநகர் கூட்டுறவு வீடு கட்டும் சங்கத்தின் இயக்குனராக இருந்து சிறப்பான முறையில் பணியாற்றி அரசின் பரிசையும் பெற்றுள்ளார். திருநகர் தொடக்கப் பள்ளியை சவிதா பாய் உயர்நிலைப்பள்ளியாக மாற்றினார். இவருக்கு நான்கு மகள்களும் மூன்று செல்வர்களும் உள்ளனர் 9-5-81 ல் இவரது மணிவிழா நடந்தது. 1988 ல் இயற்கை எய்தினார்.



## டாக்டர் N. N. கண்ணப்பன் அவர்களுக்கு "கமல் பத்ரா விருது"

"சாதனை புரிந்த இளைஞர்" பட்டம் பெற்ற டாக்டர் N N. கண்ணப்பன் அவர்களுக்கு 1990 சனவரி 20, 21 ல் சேலத்தில் நடைபெற்ற 138 ஜேஜிஸ் சங்கங்கள் கலந்து கொண்ட ஜேஜிஸ் கருத்தரங்கு மாநாட்டில் சென்னை உயர் நீதி மன்றநீதிபதி ஜஸ்டிஸ்எசு ராமலிங்கம் முன்னிலையில் தமிழகஜேஜிஸ் தலைவர் ஆர். ரகுநாதன் அவர்கள் "கமல் பத்ரா விருதினை வழங்கினார். சமல்பத்ரா விருது" பெற்ற டாக்டருக்கு நகரத்தார் இதழின் சார்பாக வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கின்றோம்.

---

## இராமேசுவரம் - காசி - இரண்டாம் நடைப்பயணம் (1990)

இராமேசுவரம் - காசி இரண்டாம நடைபயணக்குழு 26-2-90 அன்று அமைப்பாளர், திருத்தொண்டர் திரு. ஆர். வயிரவன் தலைமையில் அமைப்பாளர் வீட்டிலிருந்து பயணம் புறப்பட்டு 1 3-90 அன்று இராமேசுவரத்திலிருந்து நடைப்பயணத்தை துவக்கினர். திருத்தொண்டர் வயிரவன் தலைமையில் திருவாளர்கள். A-L. தியாகராசன். M பாலசுந்தரம், மு. மெ ஆதினமிளகி, முருகன் அடிமை மு வீரப்பன் P. சாமிநாதபிள்ளை N. நடராசன், P V. இராமகிருட்டிணன், செ. நா வெ. அருணாசலம் செட்டியார், AR. SM. வெள்ளையன், அருள்தொண்டர் RM. நாராயணன், சி சே ராம சேவுகப்பெருமாள், RM. சுப்பையா, RM. அருணாசலம் MV கணேசன் ஆகிய 15 நபர்கள் நடைப் பயணத்தில் பங்கு கொள்கின்றார்கள்

தலைமை நிலையம்: பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரனார் திருஅமுதத் திட்டத்திற்கு பணம் அனுப்ப விரும்புவர்கள் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பவும்

பொன்முடி பதிப்பகம், 123, முத்துப்பட்டணம் மூன்றாம் வீதி, காரைக்குடி - 623001 பசும்பொன் மாவட்டம்.

# பள்ளத்தூரின் சிறப்புக்கள்

சித. உமையாள்

காரைக்குடிக்கு வடக்காக, செட்டிநாட்டிற்கு தெற்காக புதுவயலுக்கு மேற்காக, குன்றக்குடிக்கு கிழக்காக அமைந்துள்ளது எங்கள் ஊர்.

கொத்தரி சோலையாண்டவர் மிகவும் புகழ்பெற்ற தெய்வமாகும். பெண்கள் சுவாமி முன் நின்று வணங்கக் கூடாது. ஐயப்பனைப் போல் அமர்ந்து அருளும் ஆண்டவரை வயது முதிர்ந்த பெண்கள் தான் நேரில் தரிசிக்கலாம். சித்திரையில் பெருந் திருவிழா நடைபெறும். உன்னத வாழ்வு அருளும் சோலை ஆண்டவரை வேண்டாதவர் இல்லை.

## சௌந்தரராசப் பெருமாள் கோவில்

சிற்பம் சம்மிக்கது (1) சந்தான கோபால கிருஷ்ணன் நாகப் படுக்கையில் குழந்தையாகப் படுத்து மெல்லியதன் வலக் காலை திருக்கரத்தால் பிடித்து வாயில் வைத்து, நம்மைப் பார்த்து எண்ணம் ஈடேற முறுவலுடன் ஆசி வழங்குவது போல காணப்படும் நமக்கு சந்தானம் வேண்டுமென்றோ, திருமணமாக வேண்டுமென்றோ இருப்பவர்கள் கோவில் தானிகரிடம் கேட்டு முறைப்படி கையில் எழுதச் செய்துக் கொண்டால் நினைத்தவை நிறைவேறும். அடுதது திருவாழி ஆழ்வார் ஆழ்போல் சக்கர அமைப்பில் காட்சித் தருவார் எண்ணம் ஈடேற குறைந்தது 12 முறை இச்சன்னதியில் வலம் வர வேண்டும்.

இங்குள்ள உயர்திரு உ. அ. பெரி. மு. அருணாசலம் செட்டியார் அவர்களின் அரும்பெரும் முயற்சியால் நிறுவப்பெற்ற **சீதாலட்சுமி ஆச்சி மகளிர் கல்லூரி** ஏறக்குறைய இப்பகுதி 3 மாவட்டங்களுக்கும் இது ஒன்றே பெண்கள் கல்லூரியாகும். இக்கல்லூரியின் செயலர் திர்வாகியின் பேரன் அனந்த பதமநாபன் செட்டியார் அவர்கள் இக்கல்லூரியை சிறப்புடன் நடத்தி வருகின்றார்கள்.

## அ. மு. மு. மருத்துவமனை :

அ. மு. மு. குடும்பத்தார் அறக்கட்டளை மூலம் அ.மு.மு. மருத்துவமனை சிறப்பாக இயங்கி வருகின்றது. நிழற்படம் (X-Ray) எடுப்பது, இதயத்துடிப்பு காண்பது (E.C.G) இரத்த, மல, நீர் சளி சோதனைகள் யாவும் நடந்து வருகின்றது. ஆச்சிமார்களின் முயற்சியால் தாய் சேய் நல விடுதி அமைக்கப் பட்டு இன்று அரசால் இயங்கி வருகின்றது.

ஊராட்சி மன்றத் தலைவரை தேர்ந்தெடுப்பதில் போட்டி இன்றி நாட்டார், நகரத்தார், ஊரார் எல்லாம் சேர்ந்து தேர்தலின்றி தலைவரை நகரத்தாரிலும், உபதலைவரை நாட்டாரிலும், மன்ற அங்கத்தினர்களை ஏகமனதாக நியமித்தும் செயல்பட்டு வருவது சிறப்புக்குரிய குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

அ.மு.மு. குடும்பத்தில் வள்ளியம்மை ஆச்சி பெயரால் பேருந்து நிலையம் உள்ளது. தற்சமயம் பேருந்துகள் நிலைய வெளியிலேயே நின்று செல்கின்றது காலத்தின் வேகமே காரணம் மூன்று அஞ்சல் நிலையங்களும், வடக்கு தெற்காக இரண்டு காவல் நிலையங்களும் இந்தியன் வங்கியும், பாண்டியன் கிராம வங்கியும் உள்ளது.

பங்குனி மீ மாரியம்மன் திருவிழாவும், சித்திரை மீ சோலையாண்டவர் திருவிழாவும், வைகாசி மீ பெரிய நாயகியம்மன் திருவிழாவும், ஆனி மீ சிவாலய திருவிழாவும் நடைபெற்று வருகின்றது.

## மங்கையர்க்கரசி மன்றம்

பெண்கள் சேர்ந்து உருவாக்கிய மங்கையர்கரசி மன்றம் திருவிளக்கு வழிபாடு சமயச் சொற்பொழிவு போன்ற சமயப் பணி களில் ஈடுபட்டு வருகின்றது. சமயம் வளர்த்து குலப் பெருமை காப்போம் நாம்'' என்பதே எங்கள் குறிக்கோள் சிறப்பாக ஆனி மாதம் காரைக்கால் அம்மையருக்கு மாம்பழத் திருவிழா நடைபெறுகின்றது.

சிவாலயத்திற்கு அருகில் சத்திரம் அமைந்துள்ளது. இரணிக் கோவில் மூன்று பிரிவினருக்கு சொந்தமானது. இங்கு தினசரி ஏழைகள் ஜுவருக்கு உணவளிக்கின்றனர்.

# தொழில் தொடங்குங்கள்



நமது இளைஞர்களுக்கு வங்கிகளில் வேலை கொடுத்து உதவிட வேண்டுமென்று இங்கே சிலர் கூறினார்கள். இன்றைய சட்டங்கள் அதற்கு ஏற்றதாக இல்லை. எனவே வேலை வாய்ப்பு கொடுப்பது சிரமமான காரியமாகும். எனவே தொழில் தொடங்குங்கள் தொழிலில் இருக்கும் நன்மை வேலை வாய்ப்பில் இல்லை. தொழில் செய்வதே மிகச் சிறந்தது.

— சுப. சபாபதி

(மதுரை நகர விடுதியில் நகரத்தார் சங்கச் சார்பில் 29-1-90 அன்று மதுரை வங்கித் தலைவர் சுப. சபாபதி அவர்களுக்கும் முனைவர் தமிழண்ணல் அவர்களுக்கு நடந்த பாராட்டு விழாவில் சேகரித்த செய்தி)

---

## நகைச்சுவை விருந்து

''ஏதுக்கு உங்க தாத்தாவை 'முதியோர் பள்ளி' யிலிருந்து டிஸ்மிஸ் பண்ணிவாங்க?''

''அவுங்க டீச்சர் பேர்லே ரசிகர் மன்றம் ஆரம்பிச்சாராம்!''

— மேடை மெய்யப்பன்

ஒரு வெற்றிக்கு முன்னே அநேகத் தோல்விக்கும் அவமானங்களும் மறைந்து கிடக்கின்றன.

— கவியரசு கண்ணதாசன்

# அம்பத்தூர் : முப்பெரும் விழா

தமிழ்நாடு அரசு வழக்குரைஞர் திரு A. R. லட்சுமணன் அவர்களுக்கு 26-1-90 அன்று அம்பத்தூர் நகரத்தார் சங்கத்தின் சார்பில் சர். இராமசாமி முதலியார் மேல்நிலைப்பள்ளியில் பாராட்டு விழா நடைபெற்றது.

R. இராமனாதன் செட்டியார் அவர்கள் விழாவிற்கு தலைமை தாங்க சங்கத் தலைவர் திரு. C. V லட்சுமணன் வரவேற்றார். விழாவில் அரசு வழக்குரைஞரை திரு. சக்திமுத்தையா பாராட்டிப் பேசினார். விழாவில் R. இராமனாதன் செட்டியார் அவர்கள் ரூ. 1001 /- நன்கொடையாக வழங்கினார். திருமதி AR மீனாட்சி ஆச்சி அவர்கள் ரூ. 501 /- ம் திரு. AR. லட்சுமணன் அவர்கள் ரூ. 501 /- ம் நன்கொடையாக வழங்கினார்கள். திருமதி. AR. லட்சுமணன் அந்தப் பள்ளியில் பத்தாம், பன்னிரண்டாம் வகுப்பில் அதிக மதிப்பெண்கள் பெற்ற நகரத்தார் மாணவர்களுக்கு ரூ. 100 /- பரிசு அளித்தார் விழா இனிது நிறைவேறியது.

– கா. இராமநாதன்
அம்பத்தூர்

---

## மருத்துவம் :

காய்ச்சல் என்பது நோயின் முன் அறிவிப்பு: பொதுவாக நமது உடலின் வெப்பநிலை 98-5 பாரன்ஹீட் உடலில் நோய் ஏதேனும் ஏற்பட்டு அதனால் வெப்ப நிலை உயர்ந்தால் அதுவே காய்ச்சலாகும்

சிலருக்கு பலவீனத்தால் உடல் நடுக்கம் ஏற்படுவதுண்டு. தேனுடன் திராட்சை பழரசத்தை உணவிற்கு பிறகு உண்டு வந்தால் உடல் நடுக்கம் நிற்கும்.

# நமது செய்திகள்

## காரைக்குடி: கண்ணதாசன் மணி மண்டபம்

பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டம் காரைக்குடியில் நெல்லிக்காவூருணி என்ற இடத்தில் 30-1-90 அன்று மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் கவியரசர் கண்ணதாசன் மணி மண்டபம் கட்டுவதற்கு அடிக்கல் நாட்டினார் ஒரு ஏக்கர் பரப்பில் 30 லட்சம் செலவில் மணி மண்டபம் கட்டி முடிக்கப்படுமென்றார். விழாவில் பெருமளவில் மக்கள் கலந்து கொண்டு விழாவைச் சிறப்பித்தனர்.

**திருச்சி சங்கம்:** திருச்சி நகரத்தார் சங்கத்தின் சார்பில் 7-2-90 புதன்கிழமையன்று திருச்சி தாயுமான சுவாமி சன்னதியில் பஞ்சமூர்த்திகளுக்கு அபிசேகமும், தீபாராதனையும் சிறப்பாக நடைபெற்றது.

**காரைக்குடி:** 12-1-90 அன்று காரைக்குடி எஸ்.எம்.எஸ்.வி மேல்நிலைப்பள்ளியில் பவள விழா ஆண்டு நிறைவு விழா சிறப்பாக நடைபெற்றது.

## காரைக்குடி - இராமசாமி தமிழ்க்கல்லூரி

காரைக்குடி இராமசாமி தமிழ்க்கல்லூரியின் 23 வது ஆண்டு விழா 22-2-90, 23-2-90 வியாழன் வெள்ளிக்கிழமைகளில் சிறப்பாக நடைபெற்றது.

## இராமகிருஷ்ண ஜெயந்தி

தேவகோட்டை ஸ்ரீ இராமகிருட்டிண வித்யாலயத்தில் அருள்மிகு ராமகிருட்டிணபரமஹசரது 155 வது பிறந்த நாள் 17-2-90 சனிக்கிழமையன்று சிறப்பாக நடைபெற்றது.

---

**நாட்டரசன்கோட்டை:**

25-2 90 ஞாயிற்றுக்கிழமை அன்று நாட்டரசன்கோட்டை கானாடுகாத்தான் முத்தையா சுப்பையா செட்டியார் பெண்கள் மேல்நிலைப்பள்ளியில் மதுரை மீனாட்சி அரிமா சங்கம், மதுரை அரவிந்த் கண் மருத்துவமனையுடன் இணைந்து இலவச கண் சிகிச்சை முகாமையும் குழந்தைகள் நலம் மற்றும் பொது மருத்துவ முகாமையினையும் சிறப்பாக நடத்தியது.

# வாசகர் எண்ணங்கள்

1989 டிசம்பர் இதழில் பொன். புதுப்பட்டி – வலையபட்டி பற்றிய செய்திகள் விளக்கமாயிருந்தன.

AL.AL.SM. நாராயணன் செட்டியார்
தேவகோட்டை

1990 பொங்கல் & தைப்பூச இதழில் மஞ்சு விரட்டு நிழற் படம் அருமை. தைப்பூச இதழில் செய்திகள், பாடல்களுடன் கடவுள் படங்களை வெளியிட்டுள்ளீர்கள். நல்ல புதிய முயற்சி அதே சமயத்தில் கலர் மிகுதியாக இருந்ததால் சாமி படங்கள் சிறப்பாக இல்லை என்பதையும் குறிப்பிட வேண்டுகிறேன்.

கா. இராமநாதன்
அம்பத்தூர்

---

## திருமணம்

இராமநாதபுரம் அரசினர் கல்லூரி தமிழ் பேராசிரியர் லெ. இராமநாதன் அவர்கள் செல்வி லெட்சுமி என்ற மீனாட்சி B Sc. Computer க்கும் திரு. S. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள் செல்வன் S முத்தையா B E (Mech) Asst. Fxecutive Engineer (நெய்வேலி லிக்னெட் கார்ப்பரேஷன் லிட்) க்கும் அரண்மனை சிறுவயலில் 7--2-90 புதன்கிழமை அன்று திருமணம் மிக சிறப்பாக நடைபெற்றது.

---

## திருமணம்

மதுரை நியூ காலேஜ் ஹவுஸ் அசெம்பிளி அரங்கம் முதல் மாடியில் 1-2 90 வியாழக்கிழமை அன்று சமுதாயவிடிவெள்ளி ஆ. ஆண்டியப்பத்தேவர் அவர்கள் செல்வன் தேவர் முரசு & உறவுக்குரல் ஆசிரியர் ஆ. சுந்தரேச பாண்டியனுக்கும், செல்வி மாலதிக்கும் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. அரசு அதிகாரிகளும், செய்தி இதழ்கள் ஆசிரியர்களும் கலந்து கொண்டு வாழ்த்துரை வழங்கினார்கள்.

---

**வேலை வாய்ப்பு:**

பெங்களூரிலும், சேலத்திலும் உள்ள இரண்டு மில்களுக்கு கேசியர் ஸ்டோர் கீப்பர் வேலைகளுக்கு பட்டப்படிப்பு தேர்வு பெற்ற நகரத்தார் மூவர் தேவை. வயது 30 லிருந்து 40 க்குள் இருக்க வேண்டும். விண்ணப்பிக்க வேண்டிய முகவரி

ஸ்ரீ ராஜேந்திர மில்ஸ் லிமிடெட்,
தபால் பெட்டி எண் : 901
சேலம்-636 009.

---

## சிவகங்கையில் மதுரை வங்கித் தலைவர் SP. சபாபதி அவர்களுக்கு பாராட்டு விழா

9-3-1990 வெள்ளிக்கிழமை யன்று சிவகாமி முத்துக் காமாட்சி திருமண மண்டபத்தில் ஒக்கூர் உயர்திரு. SK. AR. SM. இராமநாதன் செட்டியார் அவர்கள் தலைமையில் மதுரை வங்கித் தலைவர் SP. சபாபதி அவர்களுக்கு பாராட்டு விழா சிறப்பாக நடைபெற்றது. வரவேற்புரையை வழக்குரைஞர் சிவ. சுப்பிர மணியன் அவர்கள் வழங்கினார். திரு. V. ஆறுமுகம் BLS பரிசு வழங்கினார். நகர் மன்றத் தலைவர் சொ. லெ. சாத்தையா, அவர்கள், வழக்குரைரும் முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினரு மான P. தியாகராசன் அவர்கள் திரு. கே. சுப்பாஸ்சந்திரபோஸ் அவர்கள் வழக்குரைஞரும், சிவகங்கைப் பிரிவு மதுரை வங்கி சட்ட ஆலோசகருமான சுப. தமிழ்மகன் மற்றும் பலரும் பாராட்டி பேசினார்கள். சோம. பாசுகரன் அவர்கள் நன்றியுரை வழங்க விழா இனிது முடிவுற்றது. விழாவிற்கான ஏற்பாடுகளை சின. செவ். வெங்கடாசலம் செட்டியார் அவர்கள், செந்தில் மைன்ஸ் சுப. கண. கண்ணப்ப செட்டியார் அவர்கள், கண நாகராசன் அவர்கள், S. கிருஷ்ணன் அவர்கள் மற்றும் பலரும் சிறப்பாக செய்திருந்தனர்

---

**ஏப்ரல் இதழில் (சித்திரைச் சிறப்பிதழில்)**
**சிறுகதை மன்னர் S.S. தென்னரசு M.L,A.**
**அவர்களுடன் நம் கண்ட நேர்**
**உரையாடல் இடம் பெறுகின்றது.**